மலர் 15 இதழ் 85

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd. No. 7897

Phone No. 76190; 76199



# நவமணி

கூட்டுறவு துறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 6—74 வெள்ளி

வெளியூர் 7—12—74 சனி



## கருணாநிதி தலைமையில்

# உணவுப்பிரச்னை பற்றி விவாதம்

## தி. மு. கழக செயற்குழு கூடியது

மதுரை, டிச. 6—இன்று மாலையில் கூடிய தி. மு. கழகச் செயற் குழுக் கூட்டத்தில் 'உணவுப் பிரச்னை பற்றி தீவிரமாக ஆலோசனை நடந்தது.

தி. மு. கழகத்தின் செயற் குழுக் கூட்டம் மதுரையை அடுத்ததிருப்பரங்குன்றத்தின் பின் பக்கம் உள்ள தென் புறங்குன்றத்தில் அமைக் கப்பட்டுள்ள அண்ணா சோலையில், ராஜாங்கம்—சுருளிமணி பந்தலில் இன்று காலை 10-15 மணிக்கு ஆரம்ப மானது.

கூட்டத்திற்கு முதல்வர் கருணாநிதி தலைமை வகித்தார். செயற்குழுப்பினர்கள் 76 பேர்களில் பேர் கலந்து கொண்டனர்.

மத்திய அமைச்சர் ஜெக ஜீவன்ராம் வருகிறார். அவரை வரவேற்பதற்காக அமைச்சர் திக்பாட்சா சென்னையில் தங்கி இருக் கிறார்.

அமைச்சர் ராமச்சந்திரன் ஜப்பான் சென்றிருக்கிறார். இரா. செழியன் எம். பி. பாராளுமன்றக் கூட்டத்தில் கலந்துகொள்ள டெல்லி சென்றிருக்கிறார்.

எனவே இவர்கள் செயற் குழுக் கூட்டத்தில் கலந்து கொள்ள முடியவில்லை. பருக் மரைக்காயர் நாளைய கூட்டத்தில் கலந்துகொள் கிறார்.

இன்று பிற்பகல் வரையில் உணவுப் பிரச்னை குறித்து இன்றைய செயற் குழுக் கூட்டத்தில் விவாதிக் கப்பட்டது.

செயற் குழுக் கூட்டம் இன்றுபிற்பகலும்தொடர்ந்து நடைபெறுகிறது.

### 500 வளைவுகள்

மதுரையிலிருந்து திருப்பரங்குன்றம் செல்லும் வழி நெடுகிலும் சுமார் 500-க்கு மேற்பட்ட அலங் காரவளைவுகள் அமைக்கப்பட் டிருந்தன.

"குருடர்களுக்கும்செவிடர் களுக்கும் வாழ்வளித்த முதல்வரே வருக, "துரோகிக் கூட்டத்தைத் தூள் தூளாக்கும் தூய தமிழனே வருக" "சிறைக் கஞ்சா தீரனே வருக", "அண்ணாவின் உண்மைத் தம்பியே வருக", "கப்பல் ஓட்டிய தமிழனே வருக" என்பன போன்ற வாசகங்கள் கருணாநிதியை வரவேற்று அந்த அலங்கார வளைவுகளில் எழுதப்பட் டிருந்தன.

திருப்பரங்குன்றம் அருகே உள்ள கோவிலுக்குப் பக் கத்தில் அமைக்கப்பட்டுள்ள ஒரு வளைவு, மாடமாளிகை கூடகோபுரம் போல் அமைக்கப்பட்டிருந்தது.

அண்ணா சோலை வாசலில் ஓலைகளால் ஒரு வளைவு அமைக்கப்பட்டுள்ளது. தஞ்சை மாவட்ட கலைஞர்கள் அதைச் சிறப்பாக அமைத் திருந்தனர்.

## கல்யாணம் நடந்தபோது பெண்ணிடம் தங்கச் சங்கிலி அபேஸ்

சென்னை, டிச. 6—பட்டப் பகலில் கல்யாணம் நடந்து கொண்டிருந்தபோது. கல் யாண விழாவிலேயே ஒரு இளம் பெண்ணின் கழுத்தி லிருந்து 2.000 ரூபாய் மதிப் புள்ள தங்கச் சங்கிலி பறி போயிற்று. இந்த சம்பவம் சென்னை மயிலாப்பூர் கல் யாண மண்டபம் ஒன்றில் நடந்தது.

தங்கச் சங்கிலி பறிபோன தைப் பார்த்துவிட்ட பொது மக்கள் உடனே கூச்சல் போட்டு, பழைய மாம்பலத் தைச் சேர்ந்த ரமேஷ் என்ற ரமணி அய்யரை (வயது 22) போலீசாரிடம் பிடித்துக் கொடுத்தனர்.

5 சவரன் எடையுள்ள 2,000 ரூபாய் மதிப்புள்ள தங்கச் சங்கிலி அவரிட மிருந்து கைப்பற்றப்பட்டது.

## 9 அழகிகள் கைது

சென்னை, டிச. 6—சென்னை யில் கடந்த வாரம் 9 அழகி கள் விபசாரத் தடுப்பு சட்டப் படி கைது செய்யப்பட்டார் கள்.

## சனார்த்தனம் கை: உண்ணாவிரத கிளர்ச்சி துவக்கினர்

சென்னை, டிச. 6—இலங்கை தமிழர் மீது இலங்கை அரசு கொடுமை இழைத்து வதைக் கண்டித்து இன்று சென்னையில் உண்ணாவிரதப் போராட்டம் துவக்கிய உலகத் தமிழ் இளைஞரவைத் தலைவர் இரா. சனார்த்தனம் கைது செய்யப்பட்டார்.

அவருடன் உண்ணாவிரதம் ஆரம்பித்த மற்றொருவரும் கைது செய்யப்பட்டார்.

சென்னை அண்ணாசாலை போஸ்ட்மாஸ்டர் ஜெனரல் அலுவலகத்திற்கு எதிரே உள்ள நடைபாதையில் அவர் கள் இருவரும் இன்று காலை உண்ணாவிரதப் போராட்டம் ஆரம்பித்தார்கள்.

அந்த அலுவலகத்தில் நுழை வோரை தடுத்ததால் அவர்கள் கைது செய்யப்பட்டனர்.

இலங்கை சர்க்காருக்கு கண் டனம் தெரிவிக்கும் கோஷங் களை அவர்கள் எழுப்பினர்கள்

### குருடர்பள்ளி மாணவர் கைது

## உடனடியாக விடுதலை செய்க: அமைச்சர் உத்தரவு

மதுரை, டிச. 6—சென்னை யில் இன்று கைது செய்யப் பட்ட குருடர் பள்ளி மாண வர்கள் 160 பேரையும் உட னடியாக கண்டிப்பு ஜாமீனில் விடுதலை செய்யுமாறு அமைச் சர் சி. வி. எம். அண்ணாமலை மதுரையிலிருந்து உத்தர விட்டார்.

குருடர்பள்ளிமாணவர்கள், பள்ளிமுதல்வரை மாற்றுவது உட்பட 5 கோரிக்கைகளை வற்புறுத்தி வருகின்றனர்.

இந்தக் கிளர்ச்சியை ஒட்டி இன்று 160 மாணவர்கள் கைது செய்யப்பட்டனர்.

இதை ஒட்டி உடனடியாக அந்த மாணவர்களை கண்டிப்பு ஜாமீனில் விடுதலை செய்யும் மாறு அமைச்சர் உத்தரவிட் டார்.

### கொலை மிரட்டல்

அரசியல்நோக்கத்துக்காகவே இந்தப் போராட்டம நடத் தப்படுகிறது. சமூக நலத் துறை டைரக்டருக்கு இது சம்பந்தமாக கொலை மிரட் டல் வந்திருப்பதாகவும இது குறித்து உடனடியாக விசா ரிக்குமாறு உத்தர விட்டிருப்பதாகவும் அமைச் சர் தெரிவித்தார்.

பள்ளியை தற்காலிகமாக மூடிவிட முடிவு செய்யப்பட் டிருப்பதாகவும் அவர் தெரி வித்தார்.

### மறியல் ஒத்திவைப்பு

## பிரதமர் இந்திராவை சந்தித்துப் பேசினார் மொரார்ஜி தேசாய்

புதுடெல்லி, டிச. 6—பழைய காங்கிரஸ் தலைவரான மொரார்ஜி தேசாய் இன்று திடீரென பிரதமர் இந்தி ராவை சந்தித்துப் பேசினார் இதைத் தொடர்ந்து மக்கள் சபையில் இன்று அவர் நடத்து வதாக இருந்த மறியல் போராட்டத்தை அவர் திங் கட்கிழமை வரை ஒத்திவைத் தார்.

சபாநாயகர் தில்லானின் ஏற்பாட்டின்பேரில் இந்திரா-மொரார்ஜிதேசாய் சந்திப்பு நடந்தது.

கோசென்சு ஊழல்பற்றிய சி. பி. ஐ. அறிக்கையை சபை யில்தாக்கல்செய்யாவிட்டால் பார்லிமெண்டில் இன்று மறி யல் நடத்தப்போவதாக மொரார்ஜி முன்னர் அறிவித் திருந்தார்.

தனது வேண்டுகோளை ஏற்று மொரார்ஜி தனது மறி யலை ஒத்திவைத்துள்ளதாக இன்று சபாநாயகர் அறிவித் தார்.

சி. பி. ஐ. குறித்து மத்திய அரசு கூறியுள்ள சமரச திட் டம பற்றி மேற்கொண்டு ஆலோசனை நடத்துவதற் காகவே மறியல் ஒத்தி வைக் கப்பட்டுள்ளது.

இன்று முதலில் தில்லான் இந்திராவுடனும் மொரார்ஜி யுடனும் பேச்சு நடத்தினார். பிறகு இந்திராவும் மொரார் ஜியும் தனித்தனியே பேச்சு நடத்தினர்.

சி. பி. ஐ. அறிக்கை,எதிர்க் கட்சித் தலைவர்களுக்கு மட் டும் காட்டப்படும். ஆனால் அந்த அறிக்கையில் உள்ள விஷயங்களை எதிர்க் கட்சித் தலைவர்கள் யாருக்கும் வெளி யிடக்கூடாது; தாங்கள் அறிந்த விஷயங்களைஎவ்விதத் திலும் பயன்படுத்தக் கூடாது என்று நேற்று அரசு தரப்பில் கூறிய சமரசத் திட்ட அடிப்படையில் பேச்சு வார்த்தை நடந்ததாகத் தெரிகிறது.

### அரசு நிபந்தனை

சி. பி. ஐ. அறிக்கையில் உள்ள விஷயங்களை வெளி யிட மாட்டோம் என்று எதிர்க்கட்சித் தலைவர்கள் ரகசியப் பாதுகாப்பு பிரமா ணம் செய்து தரவேண்டும என்றும நேற்று அரசு தரப் பில் நிபந்தனை கூறப்பட்டது.

அரசின் இந்த சமரசத் திட்டத்தை ஏற்பதா?, அல் லது அதை நிராகரித்து மறி யல் நடத்துவதா என்று நேற்று மாலையிலிருந்தே எதிர்க்கட்சித் தலைவர்கள் தொடர்ந்து ஆலோசனை நடத்தினர்.

அதைத் தொடர்ந்துதான் இன்று காலையில் தில்லான் முன்னிலையில் பிரதமர் இந்தி ராவும், மொரார்ஜி தேசா யும் சந்தித்துப் பேசினார்.

### மாலைகள் குவிந்தன; வாழ்த்துக்கள் முழங்கின

# மதுரையில் கருணாநிதி: மகத்தான வரவேற்பு

மதுரை. டிச. 6—இன்று மதுரை வந்திருந்த முதல்வர் கருணாநிதிக்கு மகத்தான வரவேற்பு அளிக்கப்பட்டது.

ரெயில் நிலையத்தில் மலை போல் குவிந்த மாலைகளுக்கு இடையேயும் வாழ்த்து முழக் கங்களுக்கிடையேயும் கருணா நிதி திணறினார்.

தி. மு கழகத்தலைவர் முதல்வர் கருணாநிதி சென்னை யிலருந்து நேற்று மாலை பாண்டியன் எக்ஸ்பிரஸ் ரெயில் மூலம் புறப்பட்டு. இன்று காலை 7 மணிக்கு மதுரை வந்து சேர்ந்தாா.

அவருடன் அமைச்சர்கள் நெடுஞ்செழியன், அன்பழகன், அன்பில் தர்மலிங்கம், ராஜா ராம், மன்னை நாராயணசாமி, கண்ணப்பன், என். வி. நட ராசன், மாதவன், ராஜாங் கம் ஆகியோர் வந்தனர்.

ரெயிலிலிருந்து இறங்கிய தும் முதல்வர் கருணாநிதிக்கு முதலில் பொன். முத்துராம லிங்கம் மாலை அணிவித்தார். அதைத் தொடர்ந்து அமைச் சர் ஓ. பி. ராமன் மாலை அணிவித்தார். மற்றும் தி. மு. கழகத் தொண்டர்கள் முன்னணித் தலைவர்கள் ஆகி யோர் மாலை அணிவித்தனர்.

அதைத் தொடர்ந்து போடி சுருளிவேல், தென்னரசு, தாழை மு. கருணாநிதி, திரவி யம், மலைக்கண்ணன், திருப்பதி, காவேரி மணியம், மதுரை முன்னாள் துணை மேயர் சங்கரன், அக்கினிராஜ், பி. எஸ. மணியம், ஏ. எஸ். ராமகிருஷ்ணன் ஆகியோர் மாலை அணிவித்தனர்.

முதல்வரின் வருகையை யொட்டி மதுரை நகரமே விழாக்கோலம்பூண்டிருந்தது. ஆயிரக்கணக்கானபேர் தாங் கள் கொண்டு வந்த மாலையை முதல்வருக்கு அணிவிக்க முடி யாமல் தவித்தனா.

ரெயில் நிலையத்தில் [illegible] மாலைகள் மலைபோல் குவிந்து காட்சி அளித்தன. ரெயில் நிலையத்தில் ஒரு மாநாடுநடப் பது போன்ற அளவுக்கு கூட் டம் நிரம்பிவழிந்தது.

ரெயிலிலிருந்து முதல்வர் இறங்கியதும் 'கலைஞர் வாழ்க' 'மாநில சுயாட்சி அடைந்தே தீருவோம்', கலைஞர் கரத்தை வலுப்படுத்துவோம் என்ற முழக்கங்கள் வானைப் பிளந்தன. அதன்பிறகு அங் கிருந்து "சர்க்கியூட் ஹவு சு"க்கு முதல்வர் கருணாநிதி காரில பயணமானார்.

அவர் சென்ற வழியெங் கும், மற்றும் மதுரை நகரம் முழுவதும் கறுப்பு சிவப்புக் கொடிகளாலும், தோரணங் களாலும் அலங்கரிக்கப்பட் டிருந்தன.

கருணாநிதி கார் சென்ற இடங்கள் எல்லாம் வழி நெடு கிலும் அவருக்கு வாண வேடிக்கை, மற்றும் வாத்திய இசை முழங்க சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது.

### கொட்டும் பனியில் கோலாகலம்

முதல்வர் வந்த பாண்டி யன் எக்ஸ்பிரஸ், ரெயில் நிலையத்துக்கு வருவதற்குமுன்ன தாகவே இன்று அதிகாலை திண் டுக்கல் வந்து சேர்ந்தது.

கொட்டும் பனியை யும் பொருட்படுத்தாமல் திண்டுக்கல் ரெயில் நிலை யத்தில் ஆயிரக் கணக்கில் மக் கள் திரண்டு நின்றிருந்தனர்.

பாண்டியன் எக்ஸ்பிரஸ் ரெயில் வந்து நின்றதும், 'கலைஞர் வாழ்க' என்ற முழக் கம் விண்ணைப் பிளந்தது.

கூடியிருந்த மக்களின் உற் சாக வரவேற்பை, முதல்வர் கருணாநிதி ரெயில் பெட்டி வாசலில் இருந்தே பெற்றுக் கொண்டார். அங்கிருந்த மக்களுக்கு கரம் கூப்பி வணக்கம் தெரிவித்தார்.

அவருக்கு பொன். சீனி வாசன் மாலை அணிவித்த தைத் தொடர்ந்து நூற்றுக் கணக்கானவர்கள் மாலை அணி வித்தனர்.

திண்டுக்கல்லிலிருந்து ரயில் சுமார் 2 பர்லாங் தூரம் புறப்பட்டுச் சென்ற பிறகும அங்கிருந்த மக்கள் 'கலைஞர் வாழ்க' என்று கூறிக் கொண்டே கருணாநிதி இருந்த பெட்டியை நோக்கி கையை அசைத்துக் கொண்டே நின்ற னர்.

பதிலுக்கு கருணாநிதியும் கையை அசைத்து மகிழ்ச்சி தெரிவித்தார்.

### உதவி கலெக்டரை கொல்ல முயற்சி:

## போலீஸ் தேடிய அ.தி.மு.க. பஞ்சாயத்து தலைவர் கைது

பட்டுக்கோட்டை, டிச 5—நெல் கடத்தல் வேட்டையின் போது தஞ்சைஉதவிக் கலெக் டரைக் கொல்ல முயன்றதாக அதிமுக பஞ்சாயத்து போர்டு தலைவரை போலீசார் கைது செய்தனர்.

இதுபற்றிக் கூறப்படுவ தாவது:—

தஞ்சாவூர் உதவி கலெக் டர் (ஆர். டி. ஓ.) எஸ். ரகு பதி, பறக்கும் படை தாசில் தார் பார்த்தசாரதி, உணவு விநியோக அதிகாரிவாசுதேவன் ஆகியோர் 3 போலீசாருடன் நெல் கடத்தல் வேட்டைக் குப் புறப்பட்டனர்கள்.

ஒரத்த நாடு அருகே [illegible] டிக்காடு புது ஆற்று பாலம் அடியில் மாட்டு வண்டியில் இருந்த நெல் மூட்டைகளை கைப்பற்ற முயன்றபோது 200 பேர் அரிவாள், கம்புகளுடன் வந்து அவர் களைத் தாக்கி கொலை செய்ய முயன்றார்களாம்.

அப்போது போலீசார் துப்பாக்கியைக் காட்டி மிரட்ட அந்த ஆட்கள் ஓடிவிட்ட [illegible] அதிகாரிகளும் உயிர் தப்பினார் கள்.

இது குறித்து ஒரத்தநாடு போலீசில் புகார் செய்யப் பட்டது. ஒரத்த [illegible] போலீஸ் இன்ஸ்பெக்டர் என். ராமசாமி வழக்கு பதிவு செய்து 'தலைமறைவாக இருந்த சில்லத்தூர் அதிமுக பஞ்சாயத்துத் தலைவர் குழந்தை, சுப்பிரமணியன், சிவலிங்கம், வீரப்பன், [illegible] கையன், கருப்பையா, [illegible] தையா, ராஜு உட்பட [illegible] களை கைது செய்தார்.

மேலும் தீவிர புலன் விசா ரணை நடைபெறுகிறது.

## போரூர் தொழிலாளர் 200பேர் கைது

சென்னை டிச. 6—முதல் அமைச்சரின்வீட்டிற்குசெல்ல முயற்சித்த போரூர் டபிள்யூ. எஸ். இன்சுலேட்டர்ஸ் நிறுவனத்தைச் சேர்ந்த 200 தொழிலாளர் கள் இன்று காலை ஊர் வலமாகச் சென்றபோது சென்னை லாயிட்ஸ் சாலை—ராயப்பேட்டை நெடுஞ்சாலை சந்திப்பில் அவர்களை தடுத்து நிறுத்தி போலீசார் கைது செய்தார்கள்.

ஊர்வலத்தின் பிரதிநிதி கள் சிலரை மட்டும் முதலமைச்சரின் வீட்டிற்குச் செல்ல போலீ சார் அனுமதித்தனர். ஆனால் ஊர்வலத்தினர் அனைவரும அங்கு செல்ல வேண்டும என்று அவர்கள் தெரிவித்த தால் அவர்களை போலீசார் கைது செய்தனர்.

## எரிகிற ஸ்டவ் கவிழ்ந்து பெண் மரணம்

சென்னை, நவ. 6—எரிந்துகொண்டிருந்தஸ்டவ் திடீரென்று கவிழ்ந்ததன் விளைவாக அதிலிருந்த மண் ணெண்ணெய் கொட்டி, இளம்பெண்ணின் சேலை தீப் பற்றி அதன் விளைவாகஅவள் இறந்தாள்.

இந்த சம்பவம் சென்னை ராயபுரத்தில் நடந்தது. சுசீலா (வயது 46) என்ற அந்தப் பெண் ஒரு உயர்தர அதிகாரி யின் மனைவி,

## மதுவிலக்கு வேட்டை தீவிரம்: லட்சாதிபதி கைதானார்

அதிராம்பட்டினம், டிச. 6—தஞ்சை மாவட்டம் அதிராம் பட்டினம் அருகே உள்ள தம்பிக்கோட்டை வடகாடு, மேலக்காடு முதலிய பகுதி களில் [illegible] பட்டுக்கோட்டை போலீஸ் டிப்டி சூப்ரண் டெண்ட் ஹபீபுல்லா, சர்க் கிள் இன்ஸ்பெக்டர் ஜி. சுந்தரராசன், மதுக்கூர் சப்-இன்ஸ்பெக்டர் மங்களநாதன் முதலியவர்கள், தமது பார்ட் டியுடன் சாராயம் காய்ச்சி யதாக இலட்சாதிபதி வீரபத் திரன உட்பட வைத்திநாதத் தேவர், சண்முகம் ராமச்சந் திர தேவர் முதலியவர்களை கைது செய்தனர். 5000 லிட் டர் சாராய ஊரலும் கைப் பற்றப்பட்டது.

முத்துப்பேட்டை போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் சோமசுந் தரராஜன் கீழக்காட்டைச் சேர்ந்த மிராசுதார் துரை சாமி தேவரைக் கைது செய்து அவரிடம் இருந்து 2 டின் உள்பட 1690 லிட்டர் சாராய ஊறலைக் கைப்பற்றி னர்.

மதுக்கூர் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் மங்களநாதன் தலைமை போலீஸ்காரர் காந்திதாஸ் முதலியவர்கள் கீழக்குறிச்சி கிராமத்தில் ராஜு நாடார் உட்பட 12 பேர்களைக் கைது செய்து அவர்களிடமிருந்த 250 லிட் டர் சாராய ஊரலையும் கைப் பற்றினர்.

சென்னையில்

## 100 அறிஞர் பங்கு கொள்ளும் பாரதி விழா

சென்னை, டிச 6—பாரதியாரின் பிறந்தநாளையொட்டி சென்னை நகரில் நாளை 7-ந் தேதியிலிருந்து 15-ந் தேதி முடிய 9 நாட்கள் பாரதியார் விழா நடைபெறும்.

முதல் நாளான 7-ந் தேதி மாலை அபிராமபுரம் காந்தி வட்டத்தைச் சேர்ந்த பாரதி அன்பர்களின் கலந்துரையாடல் நடைபெறும்.

8-ந் தேதிகாலையில்விழாவை டாக்டர் எஸ். சங்கரராசு தலைமையில் சென்னை ஹைகோர்ட் ... தி என். கிருஷ்ணசாமி ரெட்டியார் துவக்கிவைப்பார். திருவல்லிக்கேணியில் பாரதியார் வாழ்ந்த இல்லத்திலிருந்து, கடற்கரையில் உள்ள பாரதி சிலைக்கு அன்று காலை 9 மணிக்கு ஊர்வலம் நடைபெறும். இந்த ஊர்வலத்தில் பாரதியாரின் பாடல்களைப் பாடிச்செல்வர். பாரதியார் சிலைக்கு மாலை அணிவிக்கப்படும்.

15-ந் தேதிவரையிலான விழாவில் ம. பொ. சி. குன்றக்குடி அடிகளார், ஈ. வி. கே. சம்பத், கி. வா. ஜ. என். மகாலிங்கம், நாரண துரைக்கண்ணன் சிலம்பொலி செல்லப்பன், டாக்டர் அவ்வை நடராஜன், வலம்புரிஜான், நா. பார்த்தசாரதி உட்பட 100-க்கும் மேற்பட்ட அறிஞர்கள் கலந்துகொள்வர்.

விழாவின் போது கவியரங்கம் 7பட்டிமன்ற நிகழ்ச்சிகள், கருத்தரங்கம், இசைநிகழ்ச்சி ஆகியவையும், கல்கி, வள்ளலார், பாரதி தாசன் ஆகியோரின் உருவப் படத்திறப்பு விழாக்களும் நடைபெறும்.

பாரதி இளைஞர் சங்கத் தலைவர் கே. ராமமூர்த்தியும், செயலாளர் வி. எஸ். மணியும் இந்த விழாவுக்கான ஏற்பாடுகளைச் செய்துள்ளனர்.

புதுவை அ. தி. மு. க. கோஷ்டி பூசல்

மேலும் வலுத்தது

# ராமச்சந்திரனை மதிக்காமல் ராமசாமி கோஷ்டியினர் மீண்டும் பொதுக்கூட்டம்

புதுவை, டிச. 6—புதுவை அ. தி. மு. க. அமைப்பாளர் டி. ராமச்சந்திரனைப் புறக்கணித்து ராமசாமி கோஷ்டியினர் மீண்டும் பொதுக் கூட்டம் நடத்தினர். இதனால் புதுவை அ. தி. மு. க.வில் ஏற்பட்டிருந்த பிளவு மேலும் வலுத்துவிட்டது.

கட்சிக் கட்டுப்பாட்டை மீறியதற்காக ராமசாமி கோஷ்டி மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படுவது உறுதி என்றும் தெரியவருகிறது.

கட்சித் தலைமையின் அனுமதியின்றி எந்தப் பொது நிகழ்ச்சியையும் நடத்தக் கூடாது என்று அ. தி. மு. க. தலைமைஉத்தரவிட்டிருந்தது.

புதுவை அ தி மு க அமைப்பாளராக டி. ராமச்சந்திரன் நியமிக்கப்பட்டது ராமசாமிக்கு பிடிக்கவில்லை. ராமச்சந்திரனை மதிப்பதில்லை என்றும் அவரது உத்தரவுகளைப் புறக்கணிப்பதுஎன்றும் ராமசாமி உறுதியாக இருந்தார்.

தமது உறுதியை காட்டும் வகையில் சில நாட்களுக்கு முன் வில்லியனூரில் பொதுக் கூட்டம் ஒன்றை ராமசாமி நடத்தினர். இதற்கு மாநில அமைப்பாளர் ராமச்சந்திரன் அனுமதி தரவில்லை. ஆயினும் இதுவரை ராமசாமிமீது நடவடிக்கை எடுக்க ராமச்சந்திரனுக்கு தைரியம் வரவில்லை.

### மீண்டும் ஒழுங்கு மீறல்

இதன் அடுத்த கட்டமாக மேலும் பொதுக் கூட்டத்தை நடத்துவது என்று ராமசாமி முடிவு செய்தார்.

அதன்படி நேற்று முன் தினம் தட்டாஞ்சாவடி தொகுதி காந்திநகர் கிராமத்தில் ராமசாமி முன்னிலையில் பொதுக் கூட்டம் நடத்தப்பட்டது.

இந்தக் கூட்டத்தில் ராமசாமியின் ஆதரவாளரான தமிழகச் சட்டசபை உறுப்பினர் எட்மண்ட் கலந்து கொண்டு பேசினர்.

ராமச்சந்திரனின்சம்மதமும் அனுமதியும் பெறுமல் இந்தக் கூட்டத்தை ராமசாமி கூட்டியது அதிமுக தலைமைக்கு பெரும் வியப்பை ஏற்படுத்தியிருக்கிறது.

இந்தக் கூட்டத்தில் முன்னாள் அமைச்சர் வேங்கடசாமி, புதுவை நகர்ப்புற அமைப்பாளர்சி.என்.பார்த்தசாரதி மாணவர் தலைவர் ராமலிங்கம்ஆகியோர் கலந்து கொண்டு பேசியிருக்கின்றனர்.

பொதுக்கூட்ட நோட்டீசில் ராமச்சந்திரனின் பெயர் அச்சிடப்பட்டிருந்ததாம். ஆனால் அறிவிப்பு தட்டிகளில் ராமச்சந்திரனின் பெயர் காணப்படவில்லை.

### தொண்டர்களைக் குழப்பும் செயல்

இதுவேண்டுமென்றேதொண்டர்களைக் குழப்புவதற்கு செய்யப்பட்டது என்று ராமச்சந்திரன் கோஷ்டியினர் கருதுகின்றனர்.

நோட்டீசில் என் பெயர் போட்டது வெறும் கண் துடைப்பே என்றே ராமச்சந்திரன் ஒரு பேட்டியில் கூறினர்.

கட்சிக் கட்டுப்பாட்டை அடுத்தடுத்து மீறுவோர்மீது மேலிடம் நடவடிக்கை எடுக்கும் என்று அ. தி. மு. க. பொருளாளர் பி. கே. லோகநாதன் நிருபர்களுக்குப் பேட்டியளித்தபோது தெரிவித்திருக்கிறார்.

இனிமேலும் நடவடிக்கை எடுக்கத் தவறினுல் கட்சியின் ஒழுங்குமுறையே குலைத்துவிடும் என்று ராமச்சந்திரன் கருதுகிறாராம்.

மேலும், காரைக்காலில் ராமசாமி கோஷ்டியினர் காந்தி தலைமையில் 5 பேர் கொண்ட குழு ஒன்று அமைத்திருப்பதாகவும் கூறப்படுகிறது.

கோஷ்டிப்பூசல் காரணமாக புதுவையில் அ.தி.முக. பிளவு வலுத்துவிட்டது என்பது தெளிவாகிவிட்டதாகக் கருதப்படுகிறது.

## ஜனவரியில் கருமாரியம்மன் கும்பாபிஷேகம்

சென்னை, டிச. 6—திருவேற்காடு அருள்மிகு தேவி கருமாரியம்மன் ஆலய கும்பாபிஷேகம் வருகிற ஜனவரி மாதம் 27-ம் தேதி நடைபெறுகிறது.

ஆலய அறங்காவலர் குழுத் தலைவர் வ. மணிவண்ணன் ... விழாவுக்கான ஏற்பாடுகளை தீவிரமாகச் செய்து வருகிறார்.

கும்பாபிஷேகம் சிறந்த முறையில் அமைய பல குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன.

நிதிக்குழு, விளம்பரக்குழு, யாகசாலைக்குழு, ... வெளியீட்டுக் குழு உறுப்பினர்களுடன் தனித்தனியே ஆற்ற வேண்டிய பணிகள் பற்றி ஆலோசனை நடத்தினார். இந்த ஆலோசனையில் அறங்காவலர்கள், ... காரி டி. பி. வேங்கடாசலம் ஆகியோர் பங்குகொண்டார்கள்.

## 11 பேர் அ.தி.மு.க.வுக்கு முழுக்கு

கே. சண்முகம், டிச. 6—சங்கம்பாளையம் அ. தி. மு. க. செயலாளர் எஸ். ஏ. நடராஜன் அக்கட்சியிலிருந்து விலகுவதாக அறிவித்துள்ளார்.

தம்முடன் மேலும் 10 பேர் அ தி மு க வி லிருந்து விலகி இடது கம்யூனிஸ்ட் கட்சியில் சேரப்போவதாக அவர் கூறினார்.

## டெல்லியில் தியாகிகளுக்கு நினைவுச்சின்னம்

புதுடெல்லி, டிச. 6—சுதந்திர போராட்டத்தில் ஈடுபட்ட தியாகிகளுக்கு டெல்லியில் நினைவுச் சின்னம் அமைக்கப்படும். மத்திய மந்திரி மோகன்தாரியா பாராளுமன்றத்தில் இந்தத் தகவலை வெளியிட்டார்.

டெல்லியில் காந்தி சிலை அமைப்பது பற்றியும் மத்திய சர்க்கார் பரிசிலனை செய்து வருகிறது.

சாப்பாடு விலை குறைக்கக்கோரி

## ஓட்டல் எதிரே மறியல் நடத்திய சீனிவாசன் கைது

சென்னை, டிச. 6— ஓட்டல்களில் சாப்பாடு விலை குறைக்கப்படவேண்டும் என்று கோரி இன்று சென்னை தியாகராய நகரில் போராட்டம் நடந்தது. இதுசம்பந்தமாக 4 பேர் கைது செய்யப்பட்டனர்.

இந்திய பண்டம் பெறுவோர் பாதுகாப்பு இயக்கத்தின் ஆதரவில் இந்தப் போராட்டம் நடந்தது.

தியாகராயநகர் உஸ்மான் சாலையில் உள்ள ஒரு ஓட்டல் எதிரே இந்தமறியல்போராட்டம் நடைபெற்றது. போராட்டம் நடத்திய இயக்கத் தலைவர் எம். கே. சீனிவாசன், என். மாணிக்கவாசகம், கலைதாசன், ஆர்தர் தாமஸ் ஆகிய 4 பேர் கைது செய்யப்பட்டார்கள்.

இந்தப் போராட்டத்தின் போது அருகில் நூற்றுக்கணக்கான மக்கள் கூடியிருந்து போராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்தனர்.

போராட்டம் நடத்தியவர்களிடமிருந்து கொடி, ஒலி பெருக்கி முதலியவைகளை போலீசார் கைப்பற்றினுர்கள்.

## சிவாஜி கணேசன் புத்தராக நடிக்க இலங்கை எதிர்ப்பு

கொழும்பு, டிச. 6—சிவாஜி கணேசன் புத்தராக நடிக்கக் கூடாது என்று இலங்கையிலுள்ள பிரபல பௌத்த சங்கம் எதிர்ப்புத் தெரிவித்துள்ளது.

சென்னையில் உள்ள படக் கம்பெனி ஒன்று சிவாஜி கணேசனை புத்தராக வைத்து ஒரு படம் எடுக்க முடிவுசெய்துள்ளதாகக் கூறப்படுகிறது.

இதனை மேற்படி பௌத்த சங்கம் ஆட்சேபித்துள்ளது.

பௌத்த துறவியல்லாத ஒருவர் புத்தராக நடித்தால் உலகெங்கிலும் உள்ள பௌத்த மதத்தினர் மன வருத்தம் கொள்வர் என்று அச்சங்கம் நிறைவேற்றியுள்ள தீர்மானம் ஒன்று கூறுகிறது.

## நம்பியார் மகன் திருமணம்: குழப்பத்தில் முடிந்தது

சென்னை, டிச. 6—வில்லன் நடிகர் நம்பியார் மகன் திருமண வரவேற்பிற்கு வந்தவர்களிடம் மரியாதையின்றி நடந்து கொண்டதால் கலாட்டா ஏற்பட்டது. நம்பியார் மகன் மோகனுக்கும், வி. ராமன் நாயர் மகள் ரேணுகாவுக்கும் குருவாயூரில் திருமணம் நடைபெற்றது.

திருமண வரவேற்பு நேற்று மாலை சென்னை மயிலை உட்லண்ட்ஸ் ஓட்டலில் நடந்தது.

வருபவர்களை புன்னகையோடு 'வருக' என்று வரவேற்பதுதான் முறை. ஆனால் இங்கு வந்தவர்களை ... சுங்க இலாகா அதிகாரி போல் சோதனை செய்வது குறையாக கேள்விமேல் கேள்விகளை அடுக்கி அவமானப்படுத்தாத குறையாக அனுப்பிவைத்தனர். வாசலில் திருமணத்தில் சம்பந்தப்பட்டவர்கள், மரியாதை தெரிந்தவர்கள் நிற்பதற்கு பதிலாக 'கிங்கரர்கள்' போல் ஸ்டண்ட் நடிகர்கள் நின்று கொண்டிருந்தனர்.

அவர்கள் கேள்விகளையும் வரவேற்பையும் சகியாமல் ஒருவர் திருமண அழைப்பை கிழித்து எறிந்துவிட்டு வெளியேறினர். இன்னொருவர் தான் யார் என்று எவ்வளவோ சொல்லியும்கேட்காமல் மாடியிலிருந்து உருட்டித் தள்ளப்பட்டார். இது முறையா என்று கேட்டபோது அவருக்கு உதை விழுந்தது. இதனால் பெருங் குழப்பம் எழுந்தது.

பத்திரிகையாளர் ஒருவரிடம் மரியாதைக் குறைவாக நடந்து கொண்டதனுல் வரவேற்பிற்கு வந்திருந்த எல்லா பத்திரிகையாளர்களும் கூட்டமாக வெளிநடப்பு செய்தனர்.

திருமண வரவேற்பு பெரும் குழப்பத்தில் முடிந்ததாகக் கூறப்படுகிறது.

## கிரிக்கெட்: இங்கிலாந்து தோல்வி

பிரிஸ்பேன், டிச. 6—ஆஸ்திரேலியா—இங்கிலாந்து இடையே நடந்த முதலாவது கிரிக்கெட் டெஸ்ட் பந்தயத்தில்ஆஸ்திரேலியாநேற்று166 விக்கெட் வித்தியாசத்தில் ஜெயித்தது.

தொடர்ந்து இரண்டாவது இன்னிங்சை ஆடிய இங்கிலாந்து கோஷ்டி 166 ரன்களில் அவுட் ஆகியதால் ஆஸ்திரேலியா வென்றது.

கோவா பகுதிமீது

இந்தியாவின் பாத்தியதை

## போர்ச்சுகல் அங்கீகாரம்

புதுடெல்லி, டிச. 6—கோவா, டாமன் பகுதிகள் மீது இந்திய அரசுக்கு முழு ஆட்சி உரிமை உண்டு என்பதை அங்கீகரிக்க போர்ச்சுகல் நாடு தற்போது முன்வந்துள்ளது.

இது பற்றிய ஒப்பந்தம் ஒன்றில் கையெழுத்திடுவதற்காக போர்ச்சுகல் வெளிநாட்டு இலாகா மந்திரி விரைவில் புதுடெல்லிக்கு வருவார்.

## மருந்து விலை உயர்வை தடுக்க அரசுக்கு எம். பி.க்கள் கோரிக்கை

புதுடெல்லி, டிச. 6— மருந்து வகைகளின் விலைவாசிகளை உயர்த்துவதற்கு மத்திய அரசு அனுமதி அளிக்கக்கூடாது என்று நேற்று மக்கள்சபையில் பல்வேறு கட்சிகளின் உறுப்பினர்கள் வற்புறுத்தினுர்கள்.

இது சம்பந்தமாக நவல் கிஷோர் சர்மா (காங்கிரஸ்) ஒரு அவசரக் கேள்வியைக் கேட்டார்.

விலைவாசிகளின் உயர்வினுல் மக்கள் ஏற்கெனவே மிகவும் அவதிப்படுகிறார்கள்; ஆகவே இந்த நிலையில் மருந்துவகைகளின் விலைகள் உயராதபடி அரசு பார்த்துக் கொள்ள வேண்டும் என்று உறுப்பினர்கள் தெரிவித்தனர்.

மருந்து வகைகளின் விலைவாசிகளை உயர்த்த அனுமதி கோரி இந்த வருடம் ஜனவரி 1-ந் தேதியிலிருந்து மருந்து தயாரிப்பாளர்களிடமிருந்து ஏராளமான மனுக்கள வந்திருப்பதாக பெட்ரோலியம் இலாகா ராஜாங்க அமைச்சர் கே. ஆர். கணேஷ் தெரிவித்தார்.

## பட்டுத்தொழில் வளர்ச்சிக்கு ரூ. 4 கோடி

சென்னை, டிச 6—தமிழ் நாட்டில் தர்மபுரி, சேலம், கோவை ஆகிய மாவட்டங்களில் பட்டுப்பூச்சி வளர்ப்பு, முசுக்கட்டை செடி வளர்ப்பு ஆகியவைகளுக்காக 4 கோடி ரூபாய் செலவாகக் கூடிய திட்டம் ஒன்றை நிறைவேற்றப்பட்டு பட்டுபோர்டு ஒப்புதல் அளித்துள்ளது.

அந்த மாவட்டங்களில் தற்போது 13 ஆயிரம் ஏக்கர் நிலங்களில் முசுக்கட்டை செடி பயிராகிறது. மேலும் 13 ஆயிரம் ஏக்கர் நிலங்களில் இந்த செடி பயிரிடப்படும்.

## இளைஞர்களுக்கு இலவச சண்டைப் பயிற்சி

சென்னை, டிச. 6—மறைந்த "ஸ்டண்டு" நடிகர், ஸ்டண்டு சோமு வீரமன்றம் (சி.டி.ஆர். அணி) சார்பில் சென்னையில் பல்வேறு இடங்களில், இளைஞர்களுக்கு இலவசமாக சண்டைப் பயிற்சி அளிக்கப்படுகிறது.

சென்னை மந்தைவெளி கோவிந்தசாமி நகர், கோடம்பாக்கம் பெரியார் ரோடு, மற்றும் பல இடங்களில் இந்த சண்டைப் பயிற்சி முகாம்கள் துவக்கப்பட்டிருக்கின்றன.

தாம்பரம் ரெயில்வே ஸ்டேஷனை அடுத்த பெருகளத்தூரில் நேற்று முதல் முறையாக ஸ்டண்டு சோமு வீர மன்றம் சி.டி.ஆர். அணியின் சார்பில் சண்டைப் பயிற்சி ஆரம்பமானது.

இந்த விழாவில், இந்திய மக்கள் கட்சித் தலைவர் சி. டி. ராஜகோபால், ஆதிசேஷன், பரமசிவம் மற்றும் பலர் கலந்துகொண்டனர்.

முதன் முறையாக சுமார் 20 இளைஞர்களுக்கு இந்த சண்டைப்பயிற்சி அளிக்கப்பட்டது.

இதே போல சென்னை கோவிந்தசாமி நகரிலும் சண்டைப்பயிற்சி ஆரம்பிக்கப்பட்டது. அதில் சுமார் 15 இளைஞர்கள் சண்டைப் பயிற்சி கற்றுக் கொண்டனர்.

சி. டி. ராஜகோபால் முன்னிலையில், மன்றத் தலைவர் பரமசிவம் சண்டைப் பயிற்சியைத் துவக்கிவைத்தார்.

# ரேஸ் செய்தி

## சனிக்கிழமை ரேசுக்கு டிப்ஸ்

சென்னை, டிச. 6— சென்னை இண்டியில் நாளை சனிக்கிழமை ரேசில் இரு கப் பந்தயங்கள் உட்பட 6 பந்தயங்கள் நடைபெறும். இந்த ரேசில் ஓடும் குதிரைகள் ஜாக்கிகளின் பெயர்கள், டிரா நம்பர், டிப்ஸ் ஆகியவை கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

### அசுவகோஷ் டிப்ஸ்

1. பேர் டிங்கம்
2. சார்லிமாங்
3. குளோரி ஆப் கங்கா
4. அவர் லிட்டில் பிரின்ஸ்
5. தி பியூரர்
6. சன்ரைஸ்

**1. மெடோஸ் பிளேட்** — 1400 மீட்டர் — 2 மணி

| | | |
|---|---|---|
| 1 | ராக்விக்டரி — எஸ். மார்ஷல்—1 | 60-00 |
| 2 | டீலன் — நியூமன்—2 | 53-00 |
| 3 | பேர்டிங்கம் — கெட்டில்—3 | 51-00 |
| 4 | ஆட்டம்கோல்ட் — மாத்யூஸ்—4 | 51-00 |

டிப்ஸ்: 1 ராக்விக்டரி 2 பேர் டிங்கம்

**2. தி பெங்கால் பிளேட்** — 1000 மீட்டர் — 2-55

| | | |
|---|---|---|
| 1 | நோ பிராப்ளம் — கெட்டில்-2 | 59-00 |
| 2 | படே சர்க்கார் — ஓடவில்லை | 56-00 |
| 3 | சார்லிமாங் — ஹீட்—5 | 52-50 |
| 4 | அடாமண்ட். — ராஸ்—3 | 52-50 |
| 5 | கிராண்ட் விஷன் — கஸ்ட்—1 | 52-50 |
| 6 | ஸ்பிரிங் ஹ... — எஸ். மா...ல்—6 | 51-00 |
| 7 | பயர் ஸ்டார்ம் — எல். மார்ஷல்—4 | 51-00 |

டிப்ஸ்: 1 நோ பிராப்ளம் 2 சார்லிமாங்

**3. மெர்ச்செண்ட்ஸ் கப்** — 1600 மீட்டர் — 3.30மணி

| | | |
|---|---|---|
| 1 | லக்கி ஸ்காட் — ஹுட்—2 | 60-00 |
| 2 | லிட்டில் எக்ஸ்பிரஸ் — ரகுமான்—5 | 56-50 |
| 3 | வில்லியம் டெல் — கிருபால்—4 | 56-00 |
| 4 | ரிவர் போர்ட் — கெட்டில்—1 | 55-50 |
| 5 | குளோரி ஆப் கங்கா — கஸ்ட்—7 | 53-50 |
| 6 | பாத் பைண்டர் — எஸ். மார்ஷல்—6 | 53-50 |
| 7 | ராயல் சபையர் — புஞசா—3 | 48-00 |
| 8 | கேம்பிளிங் கேங் ஸ்டார் — ராஸ்—8 | 45-50 |

டிப்ஸ்: 1. கேம்பளிங் கேங்ஸ்டர் 2. குளோரி ஆப் கங்க 3. ரிவர் போர்ட்
எதிர்பாராத வெற்றி: பாத் பைண்டர்

**4. தி மிராஷ் பிளேட்** — 2000 மீட்டர் — 4-05மணி

| | | |
|---|---|---|
| 1 | ஏர்ஹோஸ்டஸ் — கெட்டில்—3 | 62-00 |
| 2 | அவர் லிட்டில் பிரின்ஸ் — ஹீட்—6 | 57-00 |
| 3 | பிரண்ட்லிடைப் — ஆஜாத்—1 | 46-00 |
| 4 | சூப்பர் சீர் — எல் மார்ஷல்—5 | 45-50 |
| 5 | ராயல்செலக்ட் — ராஸ்—4 | 45-50 |
| 6 | ஹேரஸ் — கிருபால்சிங்—2 | 45-50 |

டிப்ஸ்: 1. பிரண்ட்லிடைப் 2. அவர் லிட்டில் பிரின்ஸ்
எதிர்பாராத வெற்றி: சூ பர்சீர்

**5. நேவி கப்** — 1600 மீட்டர் — 4-40 மணி

| | | |
|---|---|---|
| 1 | அஜீம் ... — இக்பால்—14 | ...1-00 |
| 2 | தி பியூரர் — கரன்சிங்—15 | 59-50 |
| 3 | பிஞேச்சியோ — ரகுமான்—6 | 59-00 |
| 4 | விங் லெட் — ஹுட்—9 | 56-50 |
| 5 | சீர் ஆப் சீர்ஸ் — எஸ் மார்ஷல்—4 | 56-00 |
| 6 | விஜயிதா — கெட்டில்—2 | 55-50 |
| 7 | நோபிள் வெஞ்சர் — மகமதுகான்—3 | 53-50 |
| 8 | குட்ஹார்ட் — கஸ்ட்—8 | 53-00 |
| 9 | ஜெம்கட்டர் — புஞசா—1 | 53-00 |
| 10 | ஒபிரான் — பிரிசன்—13 | 51-00 |
| 11 | பேர் ஏஞ்சலா — கிருபால் சிங்—5 | 49-00 |
| 12 | ஆப்பிரிக்கன் ஸ்டார் — ஹேரவல்—7 | 48-50 |
| 13 | கோல்டன் பிரேஸ்லிட் — எல். மார்ஷல்—10 | 47-00 |
| 14 | ஆப்பிள் டுவிஸ்ட் — நாதுசிங்—11 | 45-50 |
| 15 | காலேஜ் கேர்ள் — மகமது அகமது—12 | 45-50 |

டிப்ஸ்: 1 விஜயிதா 2 தி பியூரர் 3 விங்லெட்
எதிர்பாராத வெற்றி: சீப் ஆப்சிர்ஸ்

**6. நியூபரி பிளேட்** — 1400 மீட்டர் — 5-15 மணி

| | | |
|---|---|---|
| 1 | ஸ்கூபி டு — ஏ. கான்—1 | 60-00 |
| 2 | யங் பிரின்சஸ் — வெங்கடேசன்—5 | 58-50 |
| 3 | பெல் வாயர் — ஷிண்டே—2 | 58-00 |
| 4 | ஸ்பீடி குவீன் — திருமூர்த்தி—7 | 52-00 |
| 5 | லேக்கோ பொடியம் — புஞசா—3 | 50-50 |
| 6 | சன்ரைஸ் — என். அகமது—4 | 49-50 |
| 7 | ராம் திலக் — நாதுசிங்—6 | 45-50 |

டிப்ஸ்: 1. யங் பிரின்சஸ் 2. சன் ரைஸ்
எதிர்பாராத வெற்றி: ஸ்பீடி குவீன்

ஜாக்பாட்:— 2, 3, 4, 5, 6-வது பந்தயங்கள்

டிரெபிள்:— 4, 5, 6-வது பந்தயங்கள்

டபுள்:— 5, 6-வது பந்தயங்கள்

எக்சாக்டா:— 3-வது பந்தயம்

தனலா:— 5-வது பந்தயம்

### நிச்சய வெற்றி

ராக் விக்டரி

பீகார் அரசு

தலைமை செயலகத்தில்

## துப்பாக்கி காட்டி ரூ. 95,000 கொள்ளை அடிக்க முயற்சி

பாட்னா, டிச. 6—பாட்னா நகரில் பீகார் அரசு தலைமைச் செயலகத்தில் 4 குண்டர்கள் துப்பாக்கியைக் காட்டி மிரட்டி 95 ஆயிரம் ரூபாய் கொள்ளை அடிக்க முயற்சித்தனர்.

சட்டசபை காஷியரிடமிருந்து அந்தப் பணத்தைப் பறிக்க அவர்கள் முயற்சித்தபோது அருகில் இருந்தவர்கள் கூச்சலிட்டனர். அந்த குண்டர்கள் உடனே ஓட்டம் பிடித்தனர்.

ஜாதி ஒழிப்பு கிளர்ச்சி:

## ஜே. பி. அறிவிப்பு

கிஷன்கஞ்ச், டிச. 6— நாட்டில் ஜாதி வித்தியாசத்தை ஒழிக்க விரைவில் புதிய கிளர்ச்சி தொடங்கப் போவதாக ஜெயப்பிரகாஷ் நாராயண் அறிவித்துள்ளார்.

பூர்னியா என்னுமிடத்தில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுகையில் அவர் இவ்வாறு கூறினார்.

பீகார் சட்டசபை அடுத்த மார்ச் மாதத்துக்குள் கலைக்கப்படாவிட்டால், போட்டி சட்டசபையை அமைக்க மார்ச் மாதத்தில் தனது தேர்தலை நடத்தப்போவதாக ஜெயப்பிரகாஷ் அறிவித்தார்.

இந்த போட்டி தேர்தலில் மாணவர்களும், மக்கள் போராட்ட கமிட்டிகளும் போட்டியிடுகின்ற இடங்களில் அவர்களுக்கு எதிராக எதிர்க் கட்சிகள் போட்டியிடாது என்று ஜெயப்பிரகாஷ் கூறினார்.

## வியாபாரிகளுக்கு 15 நாள் கெடு: மதுரைமுத்து எச்சரிக்கை

மதுரை, டிச. 6— வியாபாரிகள் தங்கள் கடைகளில் பெயர்ப் பலகைகளை தமிழில் எழுதவேண்டும் இன்னும் 15 நாட்களில் அப்படி செய்யாவிட்டால் தமிழர் படையை ஆரம்பித்து போட்டம் நடத்துவேன் என்று மதுரை முத்து எச்சரித்திருக்கிறார்.

தமிழ்காக்கும் படையின் சார்பில் மதுரையில் பொதுக்கூட்டம் நடந்தது. இதில் கலந்துகொண்டு பேசுகையில் மதுரை முத்து பேசியதாவது:

நாங்கள் மதுரை மாநகராட்சியில் ஒரு தீர்மானம் போட்டோம். வியாபார நிறுவனங்கள் தங்கள் கடைகளுக்குமுன் தமிழில் பெயர்ப் பலகை போடவேண்டும் என்று தீர்மானம் போட்டோம். அதை யாரும் கடைப் பிடித்ததாகத் தெரியவில்லை. மாணவர்கள் நினைத்தால் அதை நிறைவேற்றிக் காட்ட முடியும். அந்த வித்தைகள் அவர்களுக்குத் தெரியும்

நான் கிழவன்தான்: ஆனாலும் இந்தப் போராட்டத்தில் ஈடுபட்டு சிறைக்குசெல்ல நான் தயங்கமாட்டேன்.

ஆகையால் இதற்காக 15 நாள் தவணை தருவோம். அதற்குள் வியாபார நிறுவனங்கள் பெயர்ப் பலகைகளைத் தமிழில் பொறிக்கவில்லை யென்றால் தமிழர் படையை ஆரம்பிக்கலாமா என்றிருக்கிறேன். அதற்கு இப்போது நிறைய வேலையிருக்கிறது. நாங்களே வேற்று மொழியில் எழுதியுள்ள பெயர்ப் பலகையை அழிப்போம். இதற்காக நடக்கும் போராட்டத்தில் ஒரு கை பார்த்துவிடுகிறேன்.

இவ்வாறு மதுரை முத்து கூறினார்.

கூட்டத்திற்கு தங்கச்சாமி தலைமை வகித்தார்.

## வியாழனை ஆராய்ந்த அமெரிக்க செயற்கை கோள்

வாஷிங்டன், டிச. 6— அமெரிக்கா பறக்கவிட்ட டயனீர்-11 என்னும் செயற்கைக் கோள் பூமியிலிருந்து வெகு தொலைவில் உள்ள வியாழன் கிரகத்தை ஆராய்ந்து தகவல்களை அனுப்பியுள்ளது.

வியாழன் கிரகத்தில் இருந்து சுமார் 26 ஆயிரம் மைல் தூரத்தில் அமெரிக்க செயற்கைக்கோள் அந்த கிரகத்தைக் கடந்து சென்றது.

பூமியிலிருந்து அனுப்பப்பட்ட ஒரு செயற்கைக் கோள் வியாழன் கிரகத்துக்கு இவ்வளவு அருகாமையில் பறந்து செல்வது இதுவே முதல்தடவை.

அந்த செயற்கைக்கோள் அனுப்பிய எண்ணற்ற தகவல்களை அமெரிக்க விஞ்ஞானிகள் பகுத்தாராய்ந்து அறிய சில காலம் பிடிக்கும்.

வியாழனைக் கடந்த அமெரிக்க செயற்கைக் கோள் தொடர்ந்து சனி கிரகத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. சனி கிரகத்தை நெருங்க அதற்கு சுமார் 5 ஆண்டு காலம் பிடிக்கும்.

## அறுபதாம் ஆண்டு நிறைவு விழா

சென்னை, டிச. 6—செட்டிநாடு எம். ஏ. சிதம்பரம் செட்டியாரின் ஏஜண்ட் ஓ. ராமகிருஷ்ணய்யரின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா சென்னை மயிலாப்பூர் ரெங்கநாயகி கல்யாணமண்டபத்தில் ராஜாசர் முத்தையா செட்டியார், எம். ஏ. சிதம்பரம் செட்டியார் ஆகியோர் முன்னிலையில் சிறப்பாக நடைபெற்றது.

## உங்கள் குரல்

### கலப்பு மணத்துக்கு மேலும் சலுகை

ஐயா, கேரளத்தில் கலப்பு மணம் செய்துகொண்டவர்களுக்கு விவசாயம் செய்வதற்கு நிலம் ஒதுக்கித் தருகிறார்கள்.

ஆந்திரமாநிலத்தில் கலப்பு மணம் செய்துகொண்டவர்களுக்கு தமிழ்நாட்டை விட 3 சலுகைகள் அதிகமாக அறிவித்திருக்கிறார்கள்.

அவைகாவன:—

கலப்பு மணம் புரிந்தவரில் ஆண் அல்லது பெண் இருவரில் ஒருவர் தாழ்த்தப் பட்டவராய் இருந்தால் அவர்களுக்கு தாழ்த்தப்பட்டவர்களுக்கு உள்ள எல்லா சலுகைகளும் உண்டு.

பின்தங்யவர்கள் சாதிவிட்டு சாதி (ரெட்டியார்) (நாயுடு) இவர்கள் செய்து கொண்டாலும் இவர்களுக்கும் தாழ்த்தப் பட்டவர்களுக்கு உள்ள எல்லா சலுகைகளும் உண்டு.

கலப்பு மணம்செய்துகொண்ட தம்பதிகளுக்கும் அவர்களுடைய பிள்ளைகளுக்கும் அரசாங்கவேலையில் முன்னுரிமை தரப்படும் என்று ஆந்திர முதல்வர் அறிவித்திருக்கிறார்.

கர்நாடகாநிலத்தில் கலப்பு திருமணம் செய்துகொண்டால் ரூ. 5000 ரொக்கமாகக் கொடுப்பதாக அறிவித்திருக்கிறார்கள். மாதத்திற்கு முன் இந்த செய்தி பத்திரிகையில் வந்ததுஎனக்கு நினைவிருக்கிறது.

தமிழக முதல்வர் சில நாட்களுக்கு முன் பொதுமக்கள் பென்ஷன் அறிவித்தபோது தமிழகத்தின் ஜனநாயகவாதி பேரறிஞர் அண்ணாவின் பிறந்த நாளின்போது அறிவித்து இந்தியாவின் ஜனநாயகவாதி காலஞ்சென்ற பண்டித ஜவஹர்லால் நேருவின் பிறந்த நாளன்று அமுலுக்கு வருமென்று அறிவித்தார். அதேபோன்று தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் எல்லாவித சலுகைகளும் தரவேண்டுமென்று இந்தியாவின் தேசத் தந்தை காந்தியின் கனவை நினைவாக்கும் நோக்கத்தோடு தாழ்த்தப்பட்ட மக்களுக்கு பட்டிதொட்டிகளில் எல்லாம் ஆண், பெண் இரண்டுசாதிகளைத்தவிர வேறு சாதிகள் இல்லை என்று அஞ்சா நெஞ்சத்துடன் ஐயாவும், பேரறிஞர் அண்ணாவும் அஞ்சா நெஞ்சன் அழகிரியும் தாங்களும், நாவலரும் மற்றும் கழகத் தலைவர்களும் கண்ட கனவை ஐயாவின் நினைவுநாள் டிசம்பர் 24 அன்று மேலே கண்ட எல்லா வித சலுகைகளும் அளிக்குமாறு தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறோம்.

எல்லாவற்றிலும் தமிழகம் முதலிடமாக இருக்கும்போது இந்தக் கலப்பு திருமணம் நம்மைவிட மற்ற மாநிலங்கள் முன்னிலையில் இருக்கிறது. நம் தமிழகமும் முன்னிலையில் வரவேண்டும் என்று தங்களை தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறோம்.

கருணாகரன்,
முத்தமிழ் மன்றம்
வல்லிவாக்கம்.

## நாளைய நிகழ்ச்சி

பாரதி இளைஞர் சங்கம்:— பாரதி பிறந்த நாள் விழா, வி. எஸ். மணி தலைமையில் கே. ராமமூர்த்தி சுராஜ் மற்றும் பலர் பேசுவர். காந்தி வட்டம், அபிராமபுரம், மாலை 7-00 மணி.

## சென்னை மார்க்கெட்

சென்னை, டிச. 6—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 520 00
(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 49 50

**வெள்ளி**

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 1100 00
உள்ளூர் 1075 00
(வெள்ளி 10 கிராம்) ரூ. 11 00

**மணிலாப்பயறு**

மாரிகால பட்டாணி மொத்த விலை ரூ. 295 00

**மணிலா எண்ணெய்**

மொத்தவிலை ரூ. 775 00
சில்லரை விலை ரூ. 8 10

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரிதிருப்பத்தூர் மொத்த விலை ரூ. 590 00
சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) ரூ. 95 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 218 00
முதல் ரூ. 223 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 147 50
விற்பனை வரி தனி
சில்லரை கிலோ 1-க்கு ரூ. 9 25

**கடலைப்பிண்ணாக்கு**

கி.கி. கொண்ட மூட்டைக்கு 70 எக்ஸ்பெல்லர் ரூ. 83 00

**சர்க்கரை**

பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 523 00
முதல் ரூ. 524 00

பட்டப்பகலில்

## காரை மடக்கி ரூ. 4 லட்சம் கொள்ளை

பம்பாய், டிச. 6—பம்பாய் நகரில் நேற்று பட்டப்பகலில் போக்குவரத்து நிறைந்த ஒரு சாலையில் 6பேர் துப்பாக்கியை காட்டி ஒரு காரை மறித்து ரூ. 3 லட்சத்து 75 ஆயிரம் பணத்தைக் கொள்ளையடித்துச் சென்றனர்.

கமிஷன் ஏஜண்டு ஒருவரும் அவருடைய சகாக்களும் இரு பாங்குகளிலிருந்து பணத்தை எடுத்துக் கொண்டு காரில் வந்து கொண்டிருந்தபோது இச்சம்பவம் நடந்தது.

கொள்ளையர்கள் பணத்தைப் பறித்துக் கொண்டு வேறு ஒரு காரில் தப்பிச் சென்றனர்.

மத்திய அரசு ஊழியர்களுக்கு

## அலவன்ஸ் பிரச்னை: மக்கள் சபையில் தி. மு. க. வெளிநடப்பு

புதுடெல்லி, டிச. 6— மத்திய அரசாங்க ஊழியர்களின் அலவன்ஸ் உயர்வு கோரிக்கை பிரச்னை சம்பந்தமாக நேற்று மக்கள் சபையில் தி. மு. கழகம். கம்யூனிஸ்டு, மார்க்சிஸ்ட், சோஷலிஸ்டு, மக்கள் கட்சி, ஜனசங்கம் ஆகிய கட்சிகளின் உறுப்பினர்கள் வெளிநடப்பு செய்தனர்.

மத்திய அரசு ஊழியர்களுக்கு சேரவேண்டிய அலவன்ஸ் உயர்வு தொகை கொடுப்பதை மத்திய அரசாங்கம் தள்ளிப் போடலாம் என்று வெளியான தகவல் குறித்து சபையில் அவசரப் பிரேரணை ஒன்றைக் கொண்டுவர கம்யூனிஸ்டு உறுப்பினர்கள் மேற்கொண்ட முயற்சி தோல்வி அடைந்தது. அதைத் தொடர்ந்து மேற்கண்ட எதிர் கட்சியின் உறுப்பினர்கள் வெளிநடப்பு செய்தனர்.

அதற்கு முன்னதாக இந்தப் பிரச்னை குறித்து எதிர்க்கட்சி உறுப்பினர்களுக்கும், காங்கிரஸ் உறுப்பினர்களுக்கும் இடையே காரசாரமான விவாதம் நடந்தது.

கேள்வி நேரம் முடிந்ததும், எஸ். எம். பானர்ஜி கம்யூனிஸ்டு) எழுந்து மத்திய அரசாங்க ஊழியர்கள் 30 லட்சம் பேர் சம்பந்தப்பட்ட அலவன்ஸ் உயர்வு குறித்து தாம் ஒரு அவசரத் தீர்மானத்திற்கு நோட்டீஸ் கொடுத்திருப்பதாகவும் இதுபற்றி சபையில் விவாதிக்கப்பட வேண்டும் என்றும் அவர் வற்புறுத்தினார்.

தினேன் பட்டாச்சாரியா (மார்க்சிஸ்ட்) அவரை ஆதரித்துப் பேசினார்.

அவர்களை எதிர்த்து காங்கிரஸ் உறுப்பினர்கள் கூச்சல் போட்டனர்.

இந்த அவசரத் தீர்மானத்திற்கு அனுமதி மறுத்து சபாநாயகர் தில்லான் தீர்ப்பு அளித்தார்.

அதைத் தொடர்ந்து எதிர்க்கட்சி உறுப்பினர்கள் வெளிநடப்பு செய்தனர்.

பின்னர் இந்தப் பிரச்னை குறித்து கவன ஈர்ப்பு பிரேரணை ஒன்றுக்கு சபாநாயகர் அனுமதி அளித்தார். அந்த கவன ஈர்ப்பு பிரேரணையை எஸ். எம். பானர்ஜி (கம்யூனிஸ்டு) முதலானோர் கொண்டு வந்திருந்தனர்.

## கோகோ உற்பத்தி பெருக்கம்

சென்னை, டிச. 6—இந்தியாவில் கோகோ சாகுபடியை பெருக்க தீவிர நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. 1980-ம் ஆண்டுக்குள் கோகோ உற்பத்தியில் இந்தியா தன்னிறைவு நிலையை எட்டிப் பிடித்துவிட முடியும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

இன்னும் சுமார் 6 வருடத்திற்குள் நாட்டில் கோகோ உற்பத்தி 5 ஆயிரம் டன்னாக உயர்ந்துவிடும்.

## லைசென்ஸ் ஊழல்: இந்திரா காங்கிரஸ் எம். பி. "சஸ்பெண்ட்"

புதுடெல்லி, டிச. 6— லைசென்ஸ் ஊழலில் சம்பந்தப்பட்ட இந்திரா காங்கிரஸ் எம். பி, துல்மோகன் ராம் அக்கட்சியிலிருந்து நீக்கப்பட்டார்.

பாண்டிச்சேரியில் உள்ள கம்பெனிகளுக்கு இறக்குமதி லைசென்சு வாங்கிக் கொடுக்க மத்திய சர்க்காருக்கு சிபாரிசு செய்ததில் நடந்த மோசடி கண்டுபிடிக்கப்பட்டது. இந்த சிபாரிசுகடிதத்தில் கையெழுத்திட்டதாக இ. காங்கிரஸ் எம். பி. துல்மோகன் ராம் ஒப்புக்கொண்டார். மற்றும் 20 இ. காங்கிரஸ் எம். பி.க்கள். "நாங்கள் கையெழுத்து போடவில்லை" என்று கூறிவிட்டனர்.

### கைது

இதுபற்றி, மத்திய ரகசிய போலீசார் விசாரணை நடத்தி பாண்டிச்சேரி கம்பெனியிடம் லஞ்சம் வாங்கி, அரசாங்கத்தை மோசடி செய்ததாக துல்மோகன்ராமை கைது செய்தார்கள்.

இந்த பிரச்சினை பாராளுமன்றத்திலும் கிளப்பப்பட்டு, துல்மோகன்ராம்மீது விசாரணை நடத்த வற்புறுத்தப்பட்டு வருகிறது.

இதற்கிடையில் இந்த ஊழல் விவகாரம் பற்றி விவாதிக்க, மத்திய மந்திரி சபையின் அவசரக் கூட்டத்தை பிரதமர் இந்திரா காந்தி கூட்டினார்.

துல்மோகன்ராமை பாராளுமன்ற இ. காங்கிரஸ் கட்சியிலிருந்து நீக்குவது என்று கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

லைசென்சு ஊழல் விவகாரத்தை பாராளுமன்றத்தில் எப்படி சமாளிப்பது என்பது குறித்தும் ஆலோசிக்கப்பட்டது.

### "சஸ்பெண்ட்"

கூட்டம் நடப்பதற்கு முன்னும் பின்னும் பல இ. காங்கிரஸ் எம். பி.க்கள் இந்திரா காந்தியை சந்தித்து பேசினார்கள். துல்மோகன்ராமை கட்சியில் இருந்து விலக்குவதற்கு அவர்கள் ஆதரவு அளித்தார்கள்.

இதைத் தொடர்ந்து துல்மோகன்ராம், கட்சியிலிருந்து "சஸ்பெண்ட்" செய்யப்பட்டு இருப்பதாக இ. காங்கிரஸ் கட்சி மேலிடம் நேற்று அறிவித்தது.

## மாஜிஸ்திரேட் பயந்து ஓட்டம்: கோர்ட்டை நடத்தினர் கிராமவாசி

அலகாபாத், டிச. 6— கோர்ட்டை கைப்பற்றி 2 மணி நேரம் கோர்ட் நடத்தியதாக இந்திய மக்கள் கட்சி எம். எல், ஏ.வும், ஒரு கிராமவாசியும் மற்றும் 5 பேரும் கைது செய்யப்பட்டுள்ளனர்.

இச்சம்பவம் உத்தரப் பிரதேச மாநிலத்தில் நடந்தது.

"கொல்லைப்புற வாசல் வழியாக மாஜிஸ்திரேட் ஓட்டம் பிடித்ததால் கிராமவாசி ஒருவரை நாங்களே மாஜிஸ்திரேட்டாக நியமித்து கோர்ட் நடத்தினோம்" என்று இந்திய மக்கள் கட்சி எம். எல். ஏ. சத்யபிரகாஷ் மாளவியா கூறினார்.

சம்பவம்பற்றி அவர் கூறியதாவது:

எங்கள் கட்சியினரும், சரய்யா கிராமத்தைச்சேர்ந்த சிலரும் அலகாபாத் மாவட்ட மாஜிஸ்திரேட் கோர்ட்டுக்கு சென்றோம். நிலம் பறிக்கப்பட்ட கிராமவாசிகளின் வழக்கு சம்பந்தமாக மாஜிஸ்திரேட்டைச் சந்தித்து முறையிட விரும்பினோம்.

### மாஜிஸ்திரேட் ஓட்டம்

மாவட்ட மாஜிஸ்திரேட் ஆர். டி. சோங்கார் பகலுணவு அருந்திக் கொண்டிருப்பதாக முதலில் கூறப்பட்டது. எனவே நாங்கள் சுமார் 45 நிமிஷ நேரம் காத்திருந்தோம்.

ஆனால் என்ன காரணத்தாலோ மாஜிஸ்திரேட் கொல்லைப்புற வழியாகத் தப்பியோடிவிட்டதாகப்பின்னர் எங்களுக்குத் தெரியவந்தது.

மாவட்ட மாஜிஸ்திரேட் மக்களின் ஊழியர். ஆனால் அவர் மக்களைச் சந்திக்க விரும்பவில்லை. எனவே விலக்குவதைத் தவிர வேறு வழியில்லை. எனவே முகமது யூனுஸ் என்னும் கிராமவாசியை நாங்களே மாவட்ட மாஜிஸ்திரேட்டாக நியமித்தோம். அவர் மாஜிஸ்திரேட் ஆசனத்தில் அமர்ந்து 2 மணி நேரம் கோர்ட் நடத்தினர்.

இவ்வாறு அவர் சொன்னார்

### கைது

"மக்கள் கோர்ட்டின் மாஜிஸ்திரேட்" ஆக 2 மணி நேரம் கோர்ட் நடத்தி சில உத்தரவுகளைப் போட்டார் அக் கிராமவாசி.

இதற்குள் தகவல் தெரிந்து அடிஷனல் மாஜிஸ்திரேட் சர்வஜித் சிங் அங்கு வந்தார். கோர்ட்டைவிட்டு வெளியேற அவர் இந்திய மக்கள் கட்சித் தலைவர்களுக்கு உத்தரவிட்டார். அவர்கள் வெளியேற மறுத்தனர். எனவே, அவர்களை கோர்ட்டிலிருந்து வெளியேற்ற அவர் போலீசாருக்கு உத்தரவிட்டார்.

போலீசார் வந்து மக்கள் கட்சி எம். எல். ஏ.வையும் 2 மணி நேரம் "கோர்ட்" நடத்திய கிராமவாசியையும் மற்றும் 5 பேரையும் கைது செய்தனர்.

## முன்னாள் ராணுவ வீரருக்கு பென்ஷன் உயர்வு

புதுடெல்லி, டிச. 6— ரிசர்வ் துறையில் உள்ளவர்கள் உட்பட ராணுவத்தில் பணிபுரிந்து ஓய்வுபெற்று, தற்போது பென்ஷன் பெறுவோர்க்கு, மூன்றுவது சம்பளக் கமிஷனின் சிபாரிசுகள் பேரில், கஷ்ட நிவாரணத் தொகை அளிக்க மத்திய அரசு தீர்மானித்துள்ளது.

ராணுவத்தில் மறுமுறை பணியாற்றுவோர்க்கும், விசேஷ குடும்பப் பென்ஷன் தாரர்களுக்கும் இந்தக் கஷ்ட நிவாரணத் தொகை கிடைக்காது.

1973-ம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதிக்கு முன்னதாக, ஓய்வுபெற்ற பென்ஷன் தாரர்களில், 85 ரூபாய்க்கும் குறைவாக பென்ஷன் வாங்குபவர்களுக்கு மாதத்திற்கு 15 ரூபாயும், 85 ரூபாய்க்கு அதிகமாகவும் 209 ரூபாய்க்கு குறைவாகவும் பென்ஷன் வாங்குபவர்களுக்கு மாதத்திற்கு 21 ரூபாயும், 210 ரூபாய்க்கு அதிகமாகவும், 409 ரூபாய்க்குக் குறைவாகவும் பென்ஷன் வாங்குபவர்களுக்கு மாதத்திற்கு 25 ரூபாயும், 500 ரூபாய் அல்லது அதற்கும் அதிகமாக பென்ஷன் வாங்குபவர்களுக்கு மாதத்திற்கு 3 ரூபாயும் கூடுதலாகப் பென்ஷன் அளிக்கப்படும்.

முன்னதாக, மத்திய அரசு, 3 முறை, ராணுவப் பென்ஷன்தாரர்களுக்கு பென்ஷன் தொகையை கூடுதலாக்கியுள்ளது.

புதிய சட்டம் வருகிறது:

## "முதலாளிகளிடமிருந்து அரசியல் கட்சிகள் பணம் வாங்கலாம்"

புதுடெல்லி, டிச. 6— பெரிய பெரிய முதலாளிகளிடமிருந்து அரசியல் கட்சிகள், தங்களின் செலவுகளுக்கு (நன்கொடையாக) பணம் வாங்கலாம்.

இதற்காக, "கம்பெனிகள் சட்டம்" புதிதாகத் திருத்தப் படுகிறது.

இப்படிப் பணம் வாங்குவதற்கு இதுவரை தடை விதிக்கப்பட்டிருந்தது. இப்போது இந்தத் தடையை நீக்க மத்திய சர்க்கார் முடிவு செய்துள்ளது.

கம்பெனிகள் சட்டத்தின், படி ஒரு கம்பெனி தனது ஆண்டு சராசரி லாபத்தில் 5 சதவீதம் அல்லது 25 ஆயிரத்தை அரசியல் கட்சிகளுக்கு நன்கொடையாக கொடுக்கலாம் என்று அனுமதி அளிக்கப்பட்டிருநதது.

1967 பொதுத்தேர்தலுக்கு பிறகு அந்த அனுமதியை மத்திய சர்க்கார் ரத்து செய்து அரசியல் கட்சிகளுக்கு கம்பெனிகள் நன்கொடை வழங்க தடை விதித்தது.

### ரூ. 50 ஆயிரம்

இப்போது, அந்த தடையை நீக்க மத்திய சர்க்கார் முடிவு செய்துள்ளது.

மேலும் உயர்ந்தபட்ச நன்கொடை தொகையை 50 ஆயிரமாக உயர்த்த தீர்மானித்துள்ளது.

இதற்காக கம்பெனிகள் சட்டம் மீண்டும் திருத்தப் படும்.

பாராளுமன்றத்தின் நடப்புக் கூட்டம், வருகிற 20-ந் தேதியுடன் முடிவடைவதால் இந்த திருத்தச் சட்டம் பாராளுமன்றத்தின் அடுத்த கூட்டத் தொடரில் கொண்டு வரப்படும்.

## சுசேதா கிருபளானி மறைவு: கவர்னர் அனுதாபம்

சேலம், நவ 6—சேலம் மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்துவரும் தமிழ்நாடு கவர்னர் கே. கே. ஷா அனுதாப செய்தி ஒன்றினை வெளியிட்டார். அதில் குறிப்பிட்டுள்ளதாவது:—

சுதந்திரப்போராட்டவீரர்களில் ஒருவரும் வணக்கத்திற்குரிய தலைவர்களில் ஒருவருமான சுசேதாகிருபளானியின் மறைவு தேசத்திற்கு மிகப் பெரிய இழப்பாகும். பண்பாளர், தேசபக்தர், பொது வாழ்வில் அடக்கத்தையும், நிதானத்தையும் கடைபிடித்து வழிகாட்டிய அவர் தேசத்தின் மரியாதைக்குரியவர். அவரை இழந்து வருத்தத்தில் ஆழ்ந்துள்ள ஆச்சார்ய கிருபளானிக்கும் அவரது குடும்பத்தாருக்கும் எனது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்" என்று அந்த அனுதாப செய்தியில் கவர்னர் கே. கே. ஷா வெளியிட்டுள்ளார்.

## ரெயில் பயணிகள் போராட்டம் வெற்றி

செங்கல்பட்டு, டிச. 6— செங்கல்பட்டு அருகே நேற்று ரெயில் பயணிகள் நடத்திய போராட்டம் உடனே வெற்றி அடைந்தது.

தாம்பரத்திலிருந்து நேற்று காலை வந்த முதலாவது வண்டியில் பாசஞ்சர் ரெயிலும், செங்கல்பட்டு நகரிலிருந்து வந்தமுதலாவது "ஆபீசர்கள் ரெயிலும்" சிங்கப்பெருமாள் கோயில், காட்டாங்கொளத்தூர், ரெயில் நிலையங்களுக்கிடையே நிறுத்திவைக்கப் பட்டன.

செங்கல்பட்டு வட்டாரத்திலிருந்து தினந்தோறும் சென்னைக்கு ரெயிலில் செல்கிற ரெயில் பயணிகள் மேற்கண்ட ரெயில்களை மறுத்திவைத்து போராட்டம் நடத்தினார்கள்.

இந்த மாதம் 1-ந் தேதியிலிருந்து விழுப்புரம் பாஸஞ்சர் ரெயில்கள் ரத்து செய்யப்பட்டதைக் கண்டித்து இந்தப் போராட்டம் நடந்தது.

ரத்து செய்யப்பட்ட அந்த ரெயில்கள் இந்த மாதம் 9-ந் தேதியிலிருந்து மீண்டும் விடப்படும் என்று ரெயில்வே அதிகாரிகள் வாக்குறுதி அளித்தனர். அதன் பிறகு அந்த ரெயில்கள் மீண்டும் புறப்பட்டுச் செல்ல ரெயில் பயணிகள் அனுமதித்தனர்.

## சுதந்திர தின வெள்ளி விழா நினைவுச்சின்னம்: கவர்னர் ஷா திறந்தார்

சேலம், டிச. 6—சுதந்திர வெள்ளிவிழா நினைவுச் சின்னத்தை சேலம் ஐந்து ரோடில் தமிழக கவர்னர் கே. கே. ஷா திறந்து வைத்தார்.

விழாவிற்கு அமைச்சர் ராஜாராம் தலைமை வகித்தார்.

கவர்னர் கே. கே. ஷா நினைவுச் சின்னத்தைத்திறந்து வைத்து பேசுகையில் கூறியதாவது:—

மகாத்மா காந்தி தலைமையில் நடந்த சுதந்திரப் போராட்ட நிகழ்ச்சிகளை, நினைவு கூர்ந்து சுதந்திரப் போராட்டத்தில் பெயர் தெரியாது பங்குகொண்ட தேசபக்தர்களுக்கும் நாம் கடமைப்பட்டுள்ளோம் என கூறினார்.

இவ்விழாவில் மாவட்ட கலெக்டர் ஏ. எம். சுவாமிநாதன் அனைவரையும் வரவேற்றார்.

நாடாளுமன்ற உறுப்பினர் ஈ. ஆர். கிருஷ்ணன், மற்றும் உயர் அதிகாரிகள் பலரும் கலந்துகொண்டனர்.

முடிவில் ஜே. ஆர். மேத்தா நன்றி கூறினார்.

# நவமணி



'சக்கைபோடு போடு ராஜா' படத்தில் ஜெய்சங்கர், ஜெயசித்ரா.

## 'சிரித்து வாழவேண்டும்'

### விமர்சனம்

"தீஎன்று தெரிந்தும் அதை மறைத்து வைக்கிறாய். அதனால் உனக்கே ஆபத்து ஏற்பட்ட பின்னர்தான் நீ உணரப் போகிறாய்"

போலி ஊசிமருந்து தயாரிக்கும் கும்பலைச் சேர்ந்த ஒருவனைப் பிடித்து, தகுந்த ஆதாரம் இல்லாததால் அவனை விடுதலை செய்யும்போது காவல் அதிகாரி எச்சரித்து சொல்லும் வார்த்தைகள் இவை.

விடுதலையாகி வீடு திரும்பும் அவன் தன் மகள் இறந்தது அதே போலி மருந்தினால் தான் என்பதை அறிந்து துடித்து திருந்துகிறான்,

திருந்தியவன் காட்டிக் கொடுத்துவிடுவானோ என்று போலி ஊசி மருந்து கூட்டத்தைச் சேர்ந்த ஒருவன் தீபாவளியன்று பட்டாசு வெடிக்கும் சத்தத்தில் துப்பாக்கியால் அவனையும், அவனது மனைவியையும் தீர்த்துக் கட்டுவதும், அலமாரியில் ஒளிந்தபடி அவர்கள் பிள்ளை பார்ப்பதும் நல்ல ஆரம்பம்!

அப்புறம்....?

தந்தையையும், தாயையும் கொன்றவனை, நல்லெண்ணம் கொண்ட முரட்டு நண்பன் ஒருவன் துணையோடு பிள்ளை பழிவாங்குகிறான்.

அசல் எம்.ஜி.ஆர் பிராண்ட் கதை!

சண்டை, கனவுக் காட்சிகள், காதல்-ஊடல், புரவல், தழுவல், ஆட்டம், பாட்டம் இத்யாதி... இத்யாதி... வகைகள் எம். ஜி. ஆர் ரசிகர்களை திருப்திப்படுத்தும் வகையில் உள்ளன.

### எம். ஜி. ஆர்

எம். ஜி. ஆர் ஏற்றுள்ள இன்ஸ்பெக்டர் ராமு, அப்துல் ரஹ்மான் இரு வேடங்களில் முரட்டு அப்துல்ரஹ்மானின் பேச்சும், நடிப்பும், ஆட்டமும் நம்மைக் கவரும்.

நசுங்குண்ட குழந்தைகளின் உடல்களைக் காட்டி இன்ஸ்பெக்டர் ராமு பேசும் கட்டம் அப்துல்ரஹ்மான் சிரித்தபடி மோதிரத்தை கழட்டித் தருவது, அப்துல்ரஹ்மானை ராமு காப்பாற்றுவது ஆகிய காட்சிகள் மனதைத் தொடும்.

சண்டைக் காட்சிகள் புதுமையாக உள்ளன. அவை நன்கு படமாக்கப்பட்டுள்ளன.

லதாவின் நடிப்பில் நல்ல முன்னேற்றம் காண[illegible]கிறது. கொச்சைத் த[illegible]ல் "என்னய்யா... [illegible] படா ரோதனையா போ[illegible]

என்று பேசி நன்றாக நடித்திருக்கிறார்.

"இரண்டு புத்திசாலிகள் ஒரே இடத்தில் இருந்தால் விவாதம் நடக்குமே தவிர... வேலை நடக்காது! அதனால் நான்தான் எங்கள் தலைவரை கொன்றேன்' என்று சர்வ சாதாரணமாக அலட்டிக் கொள்ளாமல் நம்பியாரைத் தவிர வேறு யாரால் பேசி நடிக்க முடியும்?

தேங்காய் சீனிவாசன் திருடி சிறை சென்று வந்ததற்கு அப்பாவிபோல் கூறும் விளக்கம் குலுங்கக் குலுங்கச் சிரிக்கவைக்கும்.

மனோகர், வி.எஸ்.ராகவன். ஐசரிவேலன், எஸ். வி. ராமதாஸ், வி. கோபாலகிருஷ்ணன் ஆகியோர் நன்கு நடித்துள்ளனர்.

எஸ். காஞ்சனா கவர்ச்சிப் பாவையாக வந்து ஒரு நடனம் ஆடுகிறார்.

### வசனம்

கருத்துள்ள நகைச்சுவையான ஆர்.கே. சண்முகத்தின் உரையாடல்கள் படத்தின் விறுவிறுப்புக்கு பெருமளவில் உதவியுள்ளன.

விஸ்வநாதன் இசையமைப்பில் "ஒன்றே சொல்வான் நன்றே செய்வான்", 'கொஞ்ச நேரம் என்னை மறந்தேன்' இரு பாடல்களும் இனிமையாக உள்ளன.

கனவுக் காட்சியில் உடை அலங்காரம் கண்களைக் கவருகின்றன. அங்கமுத்துவின் அரங்க அமைப்பு சிறப்பாக உள்ளது.

### டைரக்ஷன்

திரைக்கதை அமைத்து எஸ். எஸ். பாலன் டைரக்ட் செய்துள்ளார்.

எம்.ஜி.ஆர். நடித்து அவர் டைரக்ட் செய்யும் முதல் படம் இது என்று கூற முடியாதபடி பழக்கப்பட்டவர் போல் சிறப்பாக டைரக்ட் செய்துள்ளார்.

குதிரையில் கருப்பு உடையணிந்த உருவம் வருவது போன்ற காட்சியை அமைத்திருப்பது நல்ல உத்தி!

படம் முழுவதும் சலிப்பு தட்டாத வகையில் பொழுது போக்கு அம்சங்களை வைத்து எஸ். எஸ். பாலன் நன்கு டைரக்ட் செய்துள்ளார்.

'அவன் ஒரு சரித்திரம்' படத்தில் சிவாஜி கணேசன், காஞ்சனா.



### நெஞ்சம் மறக்கவில்லை

## புதுமுகங்களை மதித்து புன்னகை மாறாது பழகும் டைரக்டர்

புதுமுகங்களை மதித்துப் புன்னகை மாறாது பழகும் டைரக்டர் பந்துலுவை மறக்கவே முடியாது என்கிறார் நடிகர் சண்முகசுந்தரம்.

திறந்த வாயை மூட முடியாதபடி வெளிப்புறப் படப்பிடிப்பில் குதிரை எட்டி உதைத்த ஒரு சம்பவத்தை ஆண்டவன் தனது அவசர புத்திக்குத் தந்த தண்டனை என்கிறார்.

'அவசர புத்தி என்ன' என்று அறிய அவசரப்படுகிறீர்களா...? படித்துப் பாருங்கள் நடிகர் சண்முகசுந்தரம் 'மினி' பேட்டியை—!



### சிவாஜி செய்த சிபாரிசு

"நான் முதன் முதலாக 'ரத்தத்திலகம்' படத்தின் மூலம் அறிமுகமானேன். அந்தப் படத்தில் என் நடிப்பைப் பார்த்து விட்டுப் பாராட்டிய அண்ணன் சிவாஜி அவர்கள் பி. ஆர். பந்துலுவின் 'கர்ணன்' படத்தில் நடிக்க எனக்கு சிபாரிசு செய்தார்.

அதன் பலனாக அந்தப்படத்தில் சல்லியன் வேடத்தில் நடிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது.

ஜெய்ப்பூரில் 'கர்ணன்' படப்பிடிப்பு நடந்தது. லட்சக்கணக்கான மக்கள், பல யானைகள், குதிரைப் படை இப்படி அரசர்களின் போர்க்களம் அமைக்கப்பட்டிருந்தது.

முதல்நாள் மேக்கப் போட்டுக்கொண்டு சென்றேன். அந்தக்காட்சியில் முத்துராமன், அசோகன், முஸ்தபா, காலஞ்சென்ற ஓ. ஏ. கே. தேவர் ஆகியோருடன் நான் நடிக்கவேண்டும். எல்லோரும் உட்கார்ந்திருந்தோம்

அன்று முழுவதும் வேளை தவறாமல் காப்பி, டிபன் சாப்பாடு எல்லாம் கரெக்டாக வந்து சேர்ந்தன.

### வேளை தவறாமல் சாப்பாடு

சாப்பிட்டுவிட்டு உட்கார்ந்திருந்தோம். மறுநாளும் இப்படித்தான். வேளை தவறாமல் சாப்பிட்டோமே தவிர வேலை செய்ய அழைப்பு வரவில்லை.

மூன்றாவது நாளும் இப்

### நடிகர் சண்முகசுந்தரம் மினி பேட்டி

படியே உட்கார்ந்திருக்க எனக்குப் பிடிக்கவில்லை. இயக்குநர் பந்துலுவிடம் சென்றேன்.

"சார்....இன்றைக்காவது எங்களுக்கு 'ஷாட்' வருமா இல்லையான்னு கொஞ்சம் சொல்லுங்க...! மேக்கப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கலாம்ப கஷ்டமாயிருக்கு" என்று கூறினேன்.

டைரக்டர் பந்துலு சிரித்துக் கொண்டே தனது உதவியாளரை அழைத்தார்.

'ஏர்பா...இந்தத்தம்பிக்கு 'ஷாட்' வருமா?" என்று கேட்டார்.

"இன்னைக்கு வராது போலத்தான் சார் இருக்கு" என்றார் உதவியாளர் சிங்கமுத்த

"தம்பி... இன்னைக்கு நீ போய் ரெஸ்ட்...எடுத்துக்க" என்று மாறாத புன்னகையுடன் பந்துலு என்னைத் தட்டிக் கொடுத்து அனுப்பிவைத்தார்.

பல்வேறு பிரச்னைகளுக்கிடையில் டைரக்டர் பந்துலு புன்னகை கொஞ்சம்கூட குறையாமல் எப்படி இருக்கிறார் என்று எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

ரசிகர்கள் மத்தியில் சண்முகசுந்தரம் என்றால் யார் என்றே தெரியாத ஒரு ஆரம்ப காலம் அது.

அப்படியிருக்கும்போது அவரிடம் நான், சென்று [illegible]வுடன் அலட்சியமாகப் பதில் சொல்லியிருக்கலாம். கடுமையாக நடந்துகொண்டிருக்கலாம். அவ்வாறு நடந்து அன்புடன் அமைதியாகப் பதில் கூறியதை என்னால் மறக்கவே முடியவில்லை.

இப்போது அவர் மறைந்து விட்டாலும் எப்போது நினைத்தாலும் டைரக்டர் பந்துலு அவர்களின் புன்னகைபூத்த முகம் என் மனக்கண்ணில் தோன்றுகிறது.

'நாளை தான் வேலை' என்று பந்துலு சார் கூறியதும் நான், முத்துராமன், ஓ. ஏ. கே. தேவர், அசோகன் ஆகிய நால்வரும் புறப்பட்டோம்.

எங்களுக்குமுன்னால் குதிரைப் படைகள் குறுக்கே ஐந்து ஐந்தா சென்றுகொண்டிருந்தன.

நான் அவசர அவசரமாக இடையில் புகுந்தேன்.

'படார்' என்று என் முகத்தில் பலமான அடி ஒன்று விழுந்தது.

முன்னால் சென்றுகொண்டிருந்த குதிரை ஒன்று பின் காலால் எட்டி உதைத்தது தான் அந்த இடிபோன்ற அடி!

அப்பப்பா...! அந்த உதையால் என் வாயைத் திறக்கவே முடியவில்லை.

பின்னால் வந்துகொண்டிருந்த முத்துராமன் அசோகன், ஓ. ஏ. கே. தேவர் எல்லோரும் ஓடிவந்து முதல் சிகிச்சை செய்தனர்.

அப்போதுதான் என் தவற்றை நான் உணர்ந்தேன்.

அவசரப்பட்டு பந்துலு சாரிடம் கேட்டதற்கு என் அவசர புத்திக்கு ஆண்டவன் கொடுத்த தண்டனையோ என்று எண்ணினேன்.

அப்போதும் பந்துலுசாரின் புன்னகை மாறாத முகம்தான என் முன்னால் தோன்றியது.

குதிரையின் உதைவாங்கிய வலியையும் மறந்துவிட்டு நான் சிரித்தேன்.

ஏன்... இப்போதுகூடத் தான் சிரிக்கிறேன்.



'பட்டிக்காட்டு ராஜா' படத்தில் ஜெயசுதா, தேங்காய் சீனிவாசன், சிவகுமார்.

## "ஓ மனிதர்களே" படத்தில் ரவிச்சந்திரன்-விஜயா ஜோடி

பருவதம் பிக்சர்சார் "ஓ மனிதர்களே எனும் பெயரில் படமொன்றைத் தயாரிக்கின்றனர்.

ரவிச்சந்திரன், கே. ஆர். விஜயா இருவரும் இணைந்து நடிக்கின்றனர்.

கதை வசனம் எழுதி கே. சந்திரபோஸ் டைரக்ட் செய்கிறார். பி. ரத்தினம் தயாரிக்கிறார்.

பட்டுக்கோட்டை ராமு, ரத்தினம் எழுதும் பாடல்களுக்கு சங்கர், கணேஷ் இசையமைக்கின்றனர்.

## கல்யாண ரகசியம்

(நாடகம்)

ஜெமினி கணேசன், மகாலிங்கம், ரஞ்சனா நடிக்கும் 'கல்யாண ரகசியம்' நாடகம் நண்பர்கள் கலாச்சார மன்றம் சார்பில் சென்னை. அண்ணாமலை மன்றத்தில் நடைபெற்றது.

ஜாதகத்தை நம்பி கொலை செய்யத் துடிக்கும் நல்லவன் ஒருவனைப்பற்றிய நகைச்சுவை நாடகம் இது. டே. கே. ராமன் கதை வசனம் எழுதியுள்ளார்.

சிரித்து மகிழலாம்.

## சேதி தெரியுமா?

### மனோரமாவின் சாதனை

நடிகை மனோரமா இதுவரை 250 மேற்பட்ட தமிழ்ப் படங்களில் நடித்துள்ளார்.

அவர் நடித்துள்ள மற்ற மொழிப் படங்கள் விவரம் வருமாறு:—

கன்னடம்-1, இந்தி-1. தெலுங்கு-4, மலையாளம்-1,

இவ்வாறு 5 மொழிகளில் திரைப்படப் பேசி நடித்து புகழ்பெற்றுள்ளது இந்திய திரையுலகில் தமிழ் நடிகை மனோரமாவைத் தவிர வேறு யாருமில்லை.

### ஜெய விஜயாவுக்கு பொன்னாடை

காலஞ்சென்ற இசை மேதை தாமரைச் செல்வம் செம்பை வைத்தியநாத பாகவதர் நடத்தி வந்த உத்தர ஏகாதசி விழாவை குருவாயூரில் இசையமைப்பாளர் ஜெயவிஜயா மூன்று நாட்கள் நடத்தினர்.

இவ்விழாவில் முதல்நாள் ஜெய விஜயாவின் இன்னிசை கச்சேரி நடந்தது.

விழாவிற்கு ஆஞ்ஞம் மாதவன் நம்பூ[illegible]பாட தலைமை வகித்து இ[illegible] இரட்டையர் ஜெய விஜயாவுக்கு பொன்னாடை போர்த்தினர்.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co operative Printing and P[illegible]ing Society Ltd.

Chief Editor: S. V. G. Sowrirajulu

Honorary Editor: N. Muthu kumarasami.

# திரை உலகம்



"உங்க வீட்டுக் கல்யாணம்" படத்தில் சோ, மனோரமா.

## சிவாஜி எங்க உயிர்

அப்சரா கம்பைன்சார் "சிவாஜி எங்க [illegible]" என்ற பெயரில் தமிழ்ப்ப[illegible] ஒன்றை தயாரிக்கின்றனர்.

சிவாஜி ரசிகன் ஒருவனின் சேவை உணர்வையும், வாழ்க்கை அனுபவங்களையும் சித்தரிக்கும் புதுமையான கதையமைப்பைக் கொண்ட இந்தப் படத்தில் புதுமுகங்கள் பலர் நடிக்கின்றனர்.

இதன் படப்பிடிப்பு ஜனவரி மாதம் துவங்குகிறது. கண்ணதாசன்பாடல்களுக்கு எம். எஸ். விஸ்வநாதன் இசையமைக்கிறார், மல்லி இராணி ஒளிப்பதிவு செய்கிறார்

கதை வசனம் எழுதி படத்தை 'மதி ஒளி' சண்முகம் டைரக்ட் செய்கிறார்.

அப்சரா கம்பைன்சார் மலையாளத்தில் நடிகை ஷீலா டைரக்ட் செய்யும் 'யக்ஷகாளம்' படத்தை தயாரித்துள்ளார். இதுஷீலா டைரக்ட் செய்யும் முதல் படம். அடுத்து அவர்கள் தயாரிப்பது "சிவாஜி எங்க உயிர்" தமிழ் படம்.

### சுக்ராச்சாரியார்

வருகிற ஜனவரி மாதம் மனோகரின் புதிய நாடகமான "சுக்ராச்சாரியார்" சென்னையில் அரங்கேறுகிறது. இதற்காக பெரும் பொருட் செலவில் பிரம்மாண்ட அரங்குகளும், ஆடை அணிவகைகளும் தயாரிக்கப்படுகின்றன.

